# பகவத் பாதை

BAGAVATH PATHAI

• Volume : 1 • Issue : 4 தமிழ் மாத இதழ் • June 2014 • Annual Subscription Rs. 100/-

• மலர் : 1 • இதழ் : 4 • ஜூன் 2014 • வருடச் சந்தா ரூ. 100/-


## தத்துவமும் செயலும்

- ஸ்ரீ பகவத்



"ஒரு தத்துவத்தை தெரிந்து கொள்வது வேறு, அதனைச் செயல்படுத்துவது வேறு. தெரிந்துகொள்வது என்பது நிகழ்ந்து கொண்டிருக்கும் ஓர் உண்மையை புரிந்துகொள்வது. செயல்படுத்துவது என்பது நிகழ்ந்து கொண்டிருக்கும் உண்மையோடு முரண்படுவது ஆகும்".

- ஸ்ரீ பகவத்

**தத்துவங்கள் யாவும், உண்மையை ஒளியாக இருந்து விளக்கிக்காட்ட மட்டுமே உதவுகின்றன. அவற்றைப் புரிந்துகொண்டால் மட்டும் போதும். அவற்றை செயல்படுத்துவது என்பது நிகழ்ந்துகொண்டிருக்கும் உண்மைக்கு எதிராக முரண்படுவதே ஆகும். எனவே தத்துவங்களை தெரிந்துகொள்வது மட்டுமே போதுமானது. உண்மையை புரிந்துகொள்வது மட்டுமே போதுமானது.**

மேலான தத்துவங்கள் அனைத்தும் உபதேசங்களாகக் கொடுக்கப்படுகின்றன.

அந்த உபதேசங்களைப் பின்பற்றுவது எவ்வாறு?

வேதங்கள் உபதேசிக்கின்றன; உபநிசத்துகள் உபதேசிக்கின்றன; பகவத்கீதை உபதேசிக்கின்றது; பல மதங்களைச் சேர்ந்த ஞானிகளும் உபதேசிக்கின்றனர்.

இந்த உபதேசங்களை எவ்வாறு செயல்படுத்துவது?

எப்போதும் விழித்த நிலையில் இருக்கவேண்டும் - awarness உடன் இருக்கவேண்டும் என்று ஜே. கிருஷ்ணமூர்த்தி கூறுகிறார். இதற்கு மாறாக இன்னுமொருவர் இன்னுமொரு உபதேசத்தைக் கூறுகிறார். அதென்ன உபதேசம்?

நாம் ஆழ்ந்து தூங்கிக் கொண்டிருக்கும்போது நமக்கு பிரச்சினைகள் எவையேனும் உள்ளதா? தூங்கும்போது நாம் எந்தப் பிரச்சினைகளுமின்றி இருக்கிறோம். விழித்திருக்கும்போதுதான் பிரச்சினைகள் உள்ளன. விழிப்பு நிலைதான் பிரச்சினையைக் கொண்டு வருகிறது. நாம் விழித்திருக்கும்போதும், தூங்கும் தன்மையில் இருப்போமானால் அதுவே நாம் பிரச்சினைகள் அனைத்திலிருந்தும் விடுபடும் வழியாகும்.

- இப்படி ஒருவர் உபதேசிக்கிறார். சாஸ்திர வல்லுனர்களும் இப்படி ஒரு நிலை உள்ளதென அதற்கு அங்கீகாரமும் வழங்கி "ஜாக்ரத்த சுசுப்தி" என்று அதற்கு ஒரு பெயரையும் கொடுக்கின்றனர்.

ஜாக்ரத் என்பது நாம் விழித்திருக்கும் நனவு நிலையாகும். சுசுப்தி என்பது கனவு இல்லாத தூக்கமாகும். ஜாக்ரத்தில் சுசுப்தி என்பது நனவுநிலையில் தூக்கத்தோடு இருப்பதைக் கூறுகிறது.

நாம் எப்போதும் சாட்சி நிலையில் இருக்கவேண்டும் என்று இன்னுமொருவர் உபதேசிக்கிறார். சாட்சியாக இருப்பது என்றால் என்ன? நாமாக முயன்று எதையுமே செய்யாமல் நடக்கும் அனைத்தையும் சாட்சியாக இருந்து பார்த்துக் கொண்டிருக்கவேண்டும் என்று இது கூறுகிறது.

நடக்கும் செயல்கள் அனைத்தையும் இறைவன் செயலாக ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று இன்னுமொருவர் உபதேசிக்கிறார். எல்லா செயல்களையும் இறைவன் செயலாக ஏற்றுக்கொள்வது என்பது என்ன? நமது முயற்சியும், சக்தியும் எல்லைக்குட்பட்டவையே. இறைவனே அளப்பறிய ஆற்றல் கொண்டவன். அனைத்தும் அவன் விருப்பப்படியே நடக்கின்றன. அவனன்றி ஓர் அணுவும் அசையாது.

- இப்படி, நடப்பவை அனைத்தையும் இறைவன் செயலாக ஏற்றுக்கொள்ளவேண்டும்.

"சும்மா இரு" என்று உபதேசிக்கிறார் இன்னுமொருவர்.

நாம் என்ன கூறுகிறோம்?

"அகத்தினுள் போராடவேண்டாம். அக நிகழ்வுகள் அனைத்தையும் அவைபோக்கில் பிரவாகமாக விட்டுவிடவேண்டும்.



- இப்படி நாம் கூறுகிறோம்.

அப்படி என்றால் என்ன?

நம் அகத்தில் எத்தனையோ விதமான உணர்வுகள் - உணர்ச்சிகள் ஏற்படுகின்றன.

அவற்றுக்கு சாதகமாகவோ, எதிராகவோ நாம் எதுவுமே செய்யாமல் அவற்றை அப்படியே விட்டுவிட்டால்

நமது உணர்வுகள் அனைத்தும் பிரவாகமாக அமைந்துவிடும்.

- இப்படி எத்தனையோ தத்துவ உபதேசங்கள் கூறப்படுகின்றன.

இந்த உபதேசங்களைச் சரியான முறையில் செயல்படுத்துவது எவ்வாறு?

அஷ்டவக்ரமுனிவர் ஜனகமகராஜாவுக்கு செய்த உபதேசங்கள் யாவும் அஷ்டவக்ரகீதை என்ற பெயரில் அழைக்கப்படுகிறது.

அந்த கீதையில் அஷ்டவக்ரர் குறிப்பிடுகிறார்:

"மும்மூர்த்திகளே நேரடியாக வந்து உனக்கு உபதேசம் செய்தாலும், நீ அந்த உபதேசங்களை மறந்தால் ஒழிய உண்மையை உணரமுடியாது - முக்தியை அடையமுடியாது!"

- இப்படித் தடால் அடியாகக் கூறி உபதேசம் பெற்றவர்களையெல்லாம் கலங்க அடித்துவிடுகிறார்.

இப்போது நாம் என்ன செய்வது?

நாம் செயல்படுவதற்கு, நமக்குச் சில உபதேசங்கள் தேவைப்படுகின்றன.

அதனை அடிப்படையாகக் கொண்டு தான் நாம் நமது முயற்சிகளில் ஈடுபட வேண்டியுள்ளது.

அந்த உபதேசங்களை மறந்துவிட்டால் பிறகு நாம் எப்படிதான் செயல்படுவது?

ஒரு அம்மா தனது மகனிடம் சமையலுக்கு தேங்காய் வாங்கிவரச் சொல்லி பத்து ரூபாய் நோட்டு ஒன்றைக் கொடுத்து அனுப்பினார்.

பையன் கடைக்குச் செல்லும் வழியில் அவனுடைய நண்பர்கள் விளையாடிக்கொண்டிருந்தார்கள்.

அதனை வேடிக்கை பார்த்ததில் அவன் என்ன வாங்க வேண்டும் என்பதே மறந்துவிட்டது. வீட்டுக்குச்சென்று அம்மாவிடம் மீண்டும் கேட்கவும் பயம்.

கடைக்குச் சென்றாலாவது நினைவுக்கு வருமா என்று நினைத்து கடைவீதிக்குச் சென்றான்.

முதற்கடையில் பூமாலைகளைக் கட்டி விற்றுக் கொண்டிருந்தார்கள். "பூமாலை பத்துரூபாய்! பூமாலை பத்துரூபாய்!" என்று கூவிக்கூவி விற்றுக் கொண்டிருந்தார்கள்.

பத்து ரூபாய் என்றதும் இவனுக்கு தான் வாங்க வந்தது பூமாலையாகத்தான் இருக்கும் என்று முடிவு செய்து பத்து ரூபாய் கொடுத்து பூமாலையொன்றை வாங்கிக் கொண்டு வீட்டிற்குத் திரும்பினான்.

திரும்பும் வழியில் பிள்ளையார் கோவில் ஒன்றில் பூஜை நடந்து கொண்டிருந்தது. பூஜையில் கலந்து கொண்டால் சுண்டல் கிடைக்கும் என்று நினைத்து அவன் அங்கே நின்று சாமி கும்பிட்டான்.

பூஜை செய்யும் பூசாரி, பூஜைக்கு ஏற்பாடு செய்தவர்களிடம் சப்தம்போட்டுக் கூறினார். "என்ன அய்யா, எல்லாம் வாங்கி வந்திருக்கிறீர்கள், மாலையை ஏன் வாங்கி வரவில்லை? மாலை இல்லாமல் பூஜையை எப்படி நடத்துவது?"

அவர் அப்படிக் கூறவும், பூஜைக்கு ஏற்பாடு செய்தவரின் கண்களில் இந்தச் சிறுவன் மாலையோடு நிற்பதுதான் தெரிந்தது. பிள்ளையாரே மாலையை அனுப்பி வைத்ததாகக் கூறிக் கொண்டு மாலையை சிறுவனிடம் பெற்றுக் கொண்டார்.

பூஜை முடிந்ததும் சிறுவனுக்கு ஒரு கூடையில் இரண்டு முறி தேங்காய், ஒரு சீப்பு வாழைப்பழம், சர்க்கரைப் பொங்கல், சுண்டல் ஆகியவற்றைக் கொடுத்து மாலைக்காக இருபது ரூபாய் நோட்டு ஒன்றையும் பூஜைக்கு ஏற்பாடு செய்தவர் கொடுத்து அனுப்பினார்.

தேங்காயைப் பார்த்ததும்தான் சிறுவனுக்கு, தான் வாங்க வந்தது தேங்காய்தான் என்பது நினைவுக்கு வந்தது.

சிறுவன் வீட்டுக்கு வந்து, "அம்மா! தேங்காய் வாங்கி வந்துவிட்டேன்!" என்று தேங்காயைக் கொடுத்தான்.

சிறுவன் தேங்காய் வாங்கவேண்டியதை நினைவு வைத்திருந்தால் தேங்காய் மட்டுந்தான் கிடைத்திருக்கும்.

அவன் அதை மறந்துவிட்டதால் அவனுக்கு தேங்காயும் கிடைத்தது, கொண்டுபோன பணத்தைவிட கூடவும் ஒரு பங்கு பணமும் கிடைத்தது. பிள்ளையாரின் பிரதிநிதி என்ற கௌரவமும் கிடைத்தது.

இப்படித்தான், நாம் நமக்கு உபதேசிக்கப்பட்ட உபதேசங்களை மறந்து பயன்பெற வேண்டுமா?

நாம் புரிந்து கொண்ட கருத்தை மட்டும் ஆய்வுக்கு எடுத்துக்கொள்வோம்.

நாம் என்ன கருத்தைக் கூறியிருக்கிறோம்?

"அக உணர்ச்சிகளுக்கு நாம் முழு சுதந்திரம் கொடுத்துவிடவேண்டும். அவற்றைச் சீரமைக்க நாம் முயற்சி செய்யக்கூடாது. அவற்றை அவைபோக்கில் பிரவாகமாக விட்டுவிடவேண்டும்".

இந்தக் கருத்தை - இந்தப் புரிதலை எவ்வாறு செயல்படுத்துவது?

நாம் ஓர் அலுவலகத்தில் ஊழியராக வேலை செய்கிறோம். நமது நிறுவனத்தில் நடந்த ஒரு வேலையினால் நமது நிறுவனத்துக்கு சிறிய நஷ்டம் ஏற்பட்டுவிடுகிறது. அந்த நஷ்டத்துக்கு நாம் தான் காரணம் என்று நிறுவனத்தின் மேலாளர் நம்மைக் குற்றஞ்சாட்டுகிறார்.

இதனால் நம் மனம் வேதனைப்படுகிறது. அதைப் பற்றிய நினைவு மீண்டும் மீண்டும் ஏற்பட்டு மன வேதனையைக் கொண்டுவருகிறது.

வேதனை ஏற்படும்போதெல்லாம், அந்த வேதனைகளிலிருந்து விடுபடவேண்டும் என்ற எண்ணம் ஏற்படுகிறது. அந்த வேதனை நமக்குள் ஆழமாக நுழைந்து அங்கேயே தங்கிவிட்டதோ என்று எண்ணும்படியாக உள்ளது.

நாம் வேதனையில் இருக்கும்தோறும், "நாம் சரியாக இல்லை" என்ற எண்ணம் நமக்கு இருந்து கொண்டே இருக்கிறது. அகப்போராட்டம் இருக்கும் வரை, "நாம் சரியாக இல்லை" என்ற உணர்வும் இருந்துகொண்டேதான் இருக்கும்.

"நாம் சரியாக இல்லை " என்ற உணர்வு இருக்கும் வரை, "நாம் சரியாக வேண்டும்" என்ற எதிர்பார்ப்பும் இருந்துகொண்டேதான் இருக்கும்.

இங்கு நாம் என்ன செய்யவேண்டும்?

நமது கருத்து - கோட்பாடு, எவ்வாறு செயல்படுகிறது? அதனை எவ்வாறு செயல்படுத்துவது?

நம்மீது ஏற்பட்ட குற்றச்சாட்டைப் பற்றிய நினைவுகளும், மனவேதனையும் நம்மையறியாமல் ஏற்படுகின்றன. அந்த வேதனையிலிருந்து விடுபடவேண்டும் என்ற எண்ணமும் நம்மையறியாமல் ஏற்படுகின்றன.

அவற்றை அவைபோக்கில் செயல்பட நாம் அனுமதிக்கிறோம். பிறகு நமக்குள் இன்னுமொரு கேள்வி வருகிறது. "அவற்றை அவைபோக்கில் விட்டாலுங்கூட, ஏன் அந்த உணர்வுகளும் சிந்தனையும் நம்மை விட்டுப் போகவில்லை?"

- இப்படி நாமாகவும் எண்ணுகிறோம்? நம்மையறியாமலும் எண்ணுகிறோம்?

இங்கு நமது கோட்பாடு எவ்வாறு செயல்படுகிறது?

இங்கு நாம் செய்யவேண்டியது என்ன?

நாம் எந்தக் கருத்தைப்புரிந்து கொண்டாலும் அதைச் செயல்படுத்திப் பார்த்துதானே அதன் உண்மைத் தன்மையைப் புரிந்துகொள்ளமுடியும்?

நாம் நமது கருத்தின் உண்மைத் தன்மையை எவ்வாறு புரிந்துகொள்வது? எவ்வாறு செயல்படுத்துவது?

நம் மனோ இயக்கம் பிரவாகமாக அமைந்திருக்கவேண்டும் என்பது நமது கருத்து - நமதுகோட்பாடு.

அது அவ்வாறு பிரவாகமாக அமையாதபோது, அங்கே முரண்பாடுகள் இருக்கின்றன என்பது அதன் பொருள்.

ஒன்று பிரவாகம் இருக்கவேண்டும் அல்லது முரண்பாடு இருக்கவேண்டும்.

இரண்டும் சேர்ந்து இருக்காது.

நமது கருத்து எதைக் கூறுகிறது?

"நம் மனதானது பிரவாக நிலையிலிருக்க வேண்டும்; அதுவே மனதினுடைய சரியான நிலை; அதுதான் அது இருக்கவேண்டிய இயற்கையான நிலை; அதுதான் மனதினுடைய ஆரோக்கியமான நிலை".

-இப்படி நமது கருத்து கூறுகிறது.

இது நமது கருத்து. ஆனால் நம் மனது எப்படி இயங்குகிறதோ அதுதான் நடைமுறை உண்மை.

நடைமுறை உண்மை எவ்வாறு உள்ளது?

நம் மனது எவ்வாறு இயங்குகிறது?

நம் மனது சிலவேளைகளில் பிரவாகமாக இயங்குகிறது? சில வேளைகளில் சுய முரண்பாட்டுடனும் - போராட்டத்துடனும் இயங்குகிறது?

நம் மனது பிரவாகமாக இயங்கும்போது, நம் கருத்துக்கு - "நம் மனம் பிரவாகமாக இயங்குவதுதான் சரி" என்ற கருத்துக்கு

வேலையோ, தேவையோ உள்ளதா?

நம் கருத்துக்கு எந்த வேலையுமோ, தேவையோ கிடையாது.

அதுவே பிரவாகமாக இயங்கும்போது அங்கே நமக்கென்ன வேலை?

நம் மனது பிரவாகமாக இயங்காமல், முரண்பாடோடு இயங்குவதாக வைத்துக்கொள்வோம். அப்போதாவது நமது கருத்துக்கு அங்கு வேலை இருக்கிறது.

நமது கருத்துக்கு வேலை கொடுப்பதாக வைத்துக்கொள்வோம். நமது கருத்து என்ன சொல்லும்?

"முரண்பாடுடன் இயங்குவது சரியல்ல; பிரவாகமாக இயங்குவதுதான் சரி" - என்று அது சொல்லும்.

அதனால் என்ன நேரும்?

முரண்பாடு சரி இல்லை என்று முரண்பாடுகளுக்கு எதிராக முரண்படும் நிலைதான் ஏற்படும்.

இது தேவையா?

முரண்பாட்டைத் தோற்றுவிக்கும் கோட்பாடுகள் தேவையா?

நமது கோட்பாடுகள், உபதேசங்கள், கொள்கைகள், கருத்துகள்

எவ்வளவு உயர்வானதாக இருந்தாலும் சரி

அவற்றை நமக்குள் பயன்படுத்துவோமானால், அவை நமக்குள் முரண்பாட்டையே ஏற்படுத்திவிடும்.

அப்படியானால்?

அஷ்ட வக்ரமுனிவர் கூறியதுபோல் நாம் தெரிந்துகொண்ட மேலான கருத்துக்களையும், தத்துவங்களையும், உபதேசங்களையும்

மறந்துவிடத்தான் வேண்டுமா?

அப்படி மறந்துவிடுவதால் என்ன லாபம்?

நல்ல உபதேசங்களையெல்லாம் மறந்துதான் ஆகவேண்டுமென்றால்

அதைத் தெரிந்து கொண்டுதான் என்ன லாபம்?

அதைத் தெரிந்து கொள்ளாமலேயே இருந்திருக்கலாமே?

ஒரு தத்துவத்தைத் தெரிந்து கொள்வது என்பது வேறு, அதனைச் செயல்படுத்துவது என்பது வேறு.

தெரிந்துகொள்வது என்பது

நிகழ்ந்து கொண்டிருக்கும் ஓர் உண்மையைப் புரிந்துகொள்வது.

செயல்படுத்துவது என்பது

நிகழ்ந்து கொண்டிருப்பதை ஏதோ ஒரு வகையில் மாற்றியமைப்பது; ஏதோ ஒரு வகையில் வடிவமைப்பது.

மாற்றியமைப்பதோ, வடிவமைப்பதோ நமக்குத் தேவைப்படுமேயானால்

நாம் அடைவதற்கு ஏதோ ஒன்று ஏற்பட்டுவிடுகின்றது.

- நாம் ஏதோ ஒன்றை அடையும் நோக்கம் - motive ஏற்பட்டு விடுகின்றது.

எவ்வளவு உயரிய தத்துவமானாலும் சரி அதனைச் செயல்படுத்த விழையும்போது

அது நோக்கங்களையும், போராட்டங்களையும் ஏற்படுத்தியே தீரும்.

அப்படியானால், உயர்ந்த தத்துவங்கள் யாவும் எதற்குத்தான் பயன்படுகின்றன?

அவற்றுக்கு பயன்பாடே கிடையாதா?

அவற்றை மறந்துதான் ஆகவேண்டுமா? அவையனைத்தும் தேவையற்ற தத்துவங்களா?

நமது அகமுரண்பாடுகள் அனைத்தும் தேவையற்றவை என்பதைப் புரிந்துகொள்வதற்கு மட்டுமே

நமக்கு உபதேசிக்கப்பட்ட மேலான தத்துவங்கள் உதவி புரிகின்றன.

அதனைத் தெரிந்துகொள்ளாத சராசரி மனிதன்

தனக்குத் தானே முரண்படுவதையே வாழ்க்கையாக வைத்திருக்கிறான்.

சரியான தத்துவங்கள் யாவும் நம் மனதின் செயல்பாட்டை வெளிச்சம் போட்டுக் காட்டுகின்றன.

சூரியன் தனது ஒளியால் அனைத்தையும் விளக்கிக் காட்டுகிறது. அது இருளைத்தான் விலக்குகிறதே தவிர எந்தச் செயலையும் மாற்றியமைப்பதில்லை.

சரியான தத்துவங்கள் யாவும், நம் மனதினை - அதன் முரண்பாட்டோடு சேர்த்து புரிந்துகொள்ள உதவுகின்றன.

இருட்டுக்குள் திருட வந்தவனும், விளக்கைப்போட்டால் ஓடிவிடுவான்.

நல்ல தத்துவங்கள் யாவும் ஒளியாக இருந்து மட்டுமே உதவுகின்றன.

அந்நிலையில் நாம் அடைய வேண்டிய தீர்வு, தாமாகவே ஏற்படுகின்றது.

மேலான உண்மைகளை

செயல்படுத்தாமல் இருப்பதுதான் அவற்றை மறந்துவிடுவதாகும். அதுதான் பயனுடையதாகும்.

**பி.கு. : இக்கட்டுரை சரியாக முடிக்கப்படவில்லை எனத்தோன்றினால் மீண்டும் ஒருமுறை படித்திடவும்.** 

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.

நமது பகவத் பாதையில் நாம் இரண்டு ஆண்டுகளைக் கடந்து தற்போது மூன்றாம் ஆண்டில் பயணித்துக் கொண்டிருக்கின்றோம். தொடக்கத்தில் மிக குறைந்த எண்ணிக்கையில் இருந்த பயணிப்போரின் எண்ணிக்கை நாளுக்கு நாள் கூடிக்கொண்டே வருகிறது.

நமது பாதையில் வரும் பகவத் ஐயாவின் கட்டுரைகள் புதிய புதிய கோணங்களில் ஞானத்தெளிவை வழங்குவதாகவும், கேள்வி - பதில்கள் நடைமுறையில் நாம் அன்றாடம் சந்திக்கும் பிரச்சினைகளுக்கு தீர்வை வழங்கி விடுதலையை கொடுப்பதாகவும், மேலும் ஜென்கதைகள் மிக தெளிவாகவும் நச்சென்று ஞானத்தை புரியவைப்பதாகவும் பயணிக்கும் பலரும் பாராட்டிய வண்ணம் உள்ளனர்.

அதேபோல் நமது பகவத் பாதை எக்காலத்தும் பயன்தரக்கூடியது. அதைப் படித்து பயன்பெறுவதோடு பாதுகாக்கவேண்டிய ஒன்றாகவும் உள்ளது.

நமது பாதயில் தொடக்கத்திலிருந்து பயணிக்கும் ஒரு சில அன்பர்கள் பகவத் பாதை இதழை ஆரம்பித்தில் இருந்து இன்றுவரை வெளிவந்த அனைத்தையும் பொக்கிஷமாக பாதுகாத்து வருவதாகக் கூறுகின்றனர்.

இடையில் இணைந்தவர்களும், புதியதாக பயணிப்பவர்களும் ஆரம்பத்திலிருந்து இதுவரை வந்த அனைத்து இதழ்களும் தேவைப்படுவதாகவும், எப்படியாவது ஏற்பாடு செய்து கொடுக்குமாறு வேண்டுகோள் விடுத்த வண்ணம் உள்ளனர்.

இவர்களின் வேண்டுகோளுக்கு இணங்க முதல் இரண்டு ஆண்டுகளில் வெளிவந்த 24 இதழ்களையும் இணைத்து ஒரே தொகுப்பாக வெளியிட ஏற்பாடு செய்ய உள்ளோம்.

இந்த 2 வருட “ பகவத் பாதை” தொகுப்பு ஜூன் மாத இறுதிக்குள் தயராகிவிடும். தேவைப்படுவோர் பகவத் மிஷனில் தொடர்புகொண்டு பெற்றுக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

அன்புடன்,
**K.S. ஜீவமணி,** ஆசிரியர்,
செல் : 97891-65555

## சத்சங்கம்

சென்னை ஸ்ரீ பகவத் மிஷன் மையத்தில் ஒவ்வொரு வாரமும் ஞாயிற்றுக்கிழமை மாலை 5-30 மணி முதல் 7-00 மணிவரை ஐயாவின் கருத்துக்களில் ஈடுபாடு கொண்ட அன்பர்கள் கூடி சத்சங்கம் நடைபெற்றுக்கொண்டு வருகிறது. வாய்ப்புள்ள அன்பர்கள் கலந்துகொண்டு பயனடைய அழைக்கிறோம்.

இப்படிக்கு

ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம், தொடர்புக்கு : 9884097438, 9381019473, 9444756744

# ஆகாமிய கர்மா

இந்நூல் தற்போது இரண்டாம் பதிப்பாக வெளியிடப்பட்டுள்ளது.

இந்நூலில் நமது கர்ம வினைகளைப் பற்றி மேலும் விரிவாக தெரிந்துகொள்ள பல உதாரணக்கதைகளையும் விளக்கங்களையும் பகவத் ஐயா அவர்கள் புதியதாக வழங்கியுள்ளார்கள்.

ஐயா அவர்களின் அணுகுமுறையில் அனைவரும் புரிந்துகொள்ளும் வகையில் ஆன்ம ஞானத்தை எளிமையாக்கி பல நூல்கள் வெளிவந்துள்ளன.

அந்த வகையில் நாம் வாழவேண்டிய தர்மநெறியை எடுத்துக்கூறி நாம் ஒவ்வொருவரும் தர்மநெறியை அனுசரித்தும் தர்மவான்களாக வாழவும் வழி வகுத்து கொடுக்கின்றது இந்நூல்.

எப்படி நமது நிஜ சொரூபமான ஆன்ம சொரூபம் வெளிப்படையாகத் தெரியாமல், விசாரித்துத்தான் தெளிவடைய வேண்டிய நிலையில் மறைபொருளாக உள்ளதோ, அதுபோல் தர்மமும் விசாரித்துப் புரிந்துகொள்ளக்கூடிய வகையில் மறைபொருளாகத்தான் உள்ளது.

மேம்போக்காகப் பார்த்தால் நல்லவர்களுக்கும், நற்செயல்களுக்கும் அங்கீகாரம் இல்லாதிருப்பதாகவே தோன்றுகின்றது.

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும். - குறள் 169

(பொறாமை பொருந்திய நெஞ்சத்தை உடைய தீயவர்கள் வளமாக வாழ்ந்திடுவதும், பொறாமை இல்லாத நல்லவர்களுடைய கஷ்டமான வாழ்க்கையும் ஆராய்ந்து பார்க்க வேண்டிய ஒன்றாகும்)

இதை ஆராய்ந்துதான் கண்டுபிடிக்கமுடியும். தர்மத்துடன் வாழ்ந்திடுவது என்றால் என்ன என்பதை விளக்கி நம்மை தெளிவடைய வைக்கிறது இந்நூல்.

கர்மா என்றால் என்ன? அதன் நடைமுறைச் செயல்பாடுகள் என்ன என்பதைத் தெளிவுபடுத்தி தர்மத்தைப் புரிய வைக்கிறது இந்நூல்.

ஜாதக ஜோதிடங்கள் உண்மைதானா? நவக்கிரகங்களுக்கு சக்தி உண்டா? நமது பிரார்த்தனைகளுக்கு பலன் உண்டா? தெய்வங்களுக்கு சக்தி உண்டா? இவற்றையெல்லாம் எப்படி நாம் தெரிந்துகொள்வது?

இவை அனைத்தையும் விஞ்ஞானப் பூர்வமாக விளக்குகிறது இந்நூல்.

இந்நூலின் முதற்பதிப்பில் பயனடைந்த ஜோதிட விற்பன்னர் ஒருவர் தனது மாணாக்கர்களுக்கு இந்த நூலையே பாடமாக நடத்தி வருகிறார்.

இந்நூல், உங்களையும், உங்கள் குடும்பத்தையும், உங்கள் சந்ததியினரையும் தர்மநெறியில் செலுத்திட வேண்டும் என்ற பிரார்த்தனையுடன், இந்நூலை உங்களுக்கு மகிழ்வோடு வழங்குகிறோம்.

**Dr. N. கைலாசம்,** தலைவர்,
ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.
செல் : 94432 90559



## ?கேள்வி பதில்¿

**கேள்வி :** ஆன்மிகத்தில் ஏதாவது சாதிக்கவேண்டும் என்று இதுவரை முயற்சி செய்துகொண்டிருந்தேன். பகவத் ஐயாவின் ஞான நூல்களைப் படித்துப் புரிந்துகொண்டபிறகு அகத்தில் (ஆன்மிகத்தில்) சாதிப்பதற்கு எதுவுமில்லை, சாதிக்கவேண்டியது புறத்தில் என்பதைத் தெரிந்துகொண்டேன். இதுவரை புறத்தில் காரியங்கள் அதிகம் செய்து பழக்கமில்லாததால், பெரிய வேலைகளைச் செய்து சாதிக்கவேண்டும் என்று நினைக்கும்போது எப்படி செய்வது என்று மலைப்பாகவும், நம்மால் முடியுமா என்ற அச்சமும் வருகிறது. இச்சூழ்நிலையில் அந்த வேலைகளை எவ்வாறு செய்வது? எப்படி புறத்தில் சாதிப்பது? இதற்கான வழிமுறைகளைக் கூறி உதவுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

**பதில் :** அகத்தில் செய்வதற்கு எதுவும் இல்லை என்பதை புரிந்துகொண்டீர்கள். நமக்கு இருக்கும் வாய்ப்பு புறம் மட்டுமே. புறத்தில் நாம் அறிவைப் பயன்படுத்தி திட்டமிட்டு செயல்படுவதால் மட்டுமே, நம்மால் சாதிக்கமுடியும். எவ்வளவு பெரிய வேலையாக இருந்தாலும் அதை செய்ய நினைக்கும்போது ஏற்படும் மலைப்புக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் அந்த வேலையை எவ்வாறு தொடங்கவேண்டும், அதன் நுணுக்கங்கள் என்ன என்ன என்பதை ஆராய்ந்து செயல்படவேண்டும். ஒரு பிரமாண்டமான வேலையைக்கூட இவ்வாறு சிந்தித்து செயல்பட ஆரம்பித்தால் மிக எளிதாக சாதித்துக் காட்டலாம்.

இதற்கு உதாரணமாக ஒரு சிறிய கதை உண்டு. அரசர் ஒருவர் இருந்தார். அவருக்கு திடீரென்று ஒரு நாள், தன் பட்டத்து யானை எவ்வளவு எடை இருக்கும் என்று அறிய ஆவல் ஏற்பட்டது. அந்தக் காலத்தில் எடைமேடைகள் எல்லாம் இல்லை. யானையை அளக்கும் அளவுக்குப் பெரிய தராசும் கிடையாது.

யானையின் எடையை எப்படி அறிவது? என்று அமைச்சர்களிடம் கேட்டார் அரசர். யாருக்கும் அதற்கான வழி தெரியவில்லை. அப்போது அமைச்சர் ஒருவரின் பத்து வயது மகன், "நான் இதன் எடையைச் சரியாகக் கணித்துச் சொல்கிறேன்" என்றான். அதைக் கேட்டு அனைவரும் சிரித்தனர். ஆனால் அவனுக்கும் ஒரு வாய்ப்பு கொடுத்தார் அரசர்.

அந்தச் சிறுவன், யானையை நதிக்கு அழைத்துச் சென்றான். அங்கே இருந்த மிகப் பெரிய படகில் யானையை ஏற்றினான். யானை ஏறியதும், தண்ணீரில் ஓரளவு அமிழ்ந்தது படகு. உடனே அவன் தண்ணீர் நனைந்த மட்டத்தைப் படகில் குறியீடு செய்தான். பிறகு யானையைப் படகிலிருந்து இறக்கி, பெரிய பெரிய கற்களைப் படகில் ஏற்றச்சொன்னான். முன்பு குறித்து வைத்திருந்த குறியீடு அளவுக்குப் படகு தண்ணீரில் மூழ்கும் வரை கற்கள் ஏற்றப்பட்டன. பின்பு அரசரிடம் அந்தக் கற்களைக் காட்டி, "அவற்றின் எடைதான் அந்த யானையின் எடை" என்றான். அனைவரும் வியந்தனர். அவனது புத்திசாலிதனத்தைப் போற்றிப் புகழ்ந்தனர்.

எல்லோரும் யானையை ஒட்டுமொத்த உருவமாகத்தான் பார்த்தார்கள். ஆகவே அவர்களால் அதன் எடையைக் கணிக்கமுடியும் எனும் நம்பிக்கை வரவில்லை. ஆனால் அந்தச் சிறுவனோ, பல எடைகளின் கூட்டுத்தொகையே யானையின் எடை என்று எண்ணிச் செயல்பட்டான்; எளிதில் விடை கண்டான்.

எவ்வளவு பெரிய செயலாக இருந்தாலும், அதைச் சின்னச் சின்ன செயல்களாகப் பிரித்துக் கொள்ளவேண்டும். பிறகு அந்த ஒவ்வொரு செயலையும், செவ்வனே செய்து முடிக்கவேண்டும். அப்போது, ஒட்டுமொத்த வேலையும் அழகாக நிறைவேறிவிடும்!

பெரிய சாதனை என்பது உடனே வருவதில்லை. சின்னச்சின்ன செயல்களையும் காலத்தே சிறப்பாக செய்யும்போது அது நம்மையும் அறியாமல் மிகப்பெரிய சாதனையில் கொண்டு சேர்த்துவிடும்.

"எதிர்கால கற்பனையில் இருப்பதை விட
நிகழ்காலத்தில் செய்ய வேண்டியதை ஒன்றி செய்வதே சிறப்பு".

V.A.P. சரவணன், சேலம்.
செல் : 99942-05880



"ஆகாமிய கர்மாவின் அதிகாரம் நம் கைகளில் மட்டுமே உள்ளது; அதற்கான அதிகாரம் ஆண்டவனுக்குக்கூட கிடையாது".

- ஸ்ரீ பகவத்

## ?கேள்வி பதில்¿

கேள்வி : நான் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் கருத்துகளை புரிந்துகொள்ள முயன்று கொண்டிருக்கிறேன். அகத்தில் சும்மா இருக்குமாறு நீங்கள் கூறுகிறீர்கள். அதாவது மனதில் எந்த எண்ணம் வந்தாலும் அவற்றை தடுக்காது அப்படியே அனுமதிக்குமாறு சொல்கிறீர்கள். நீங்கள் கையில் எடுக்காத நிலையில் அந்த எண்ணங்களுக்கு ஆயுள் அரை நொடிதான் என்று சொல்கிறீர்கள். ஆனால் அந்த அரை நொடியில் அந்த எண்ணங்களை கையில் எடுக்காது இருக்க நான் விழிப்பு நிலையில் தானே இருந்தாக வேண்டும். விழிப்பு நிலையில் இல்லாமல் அப்படியே எல்லா எண்ணங்களையும் விட்டுவிட்டால் நான் எப்போதும் பல எண்ணங்களோடு மயக்க நிலையில் இருப்பதாகத்தான் உணர்கிறேன். பல எண்ணங்கள் தோன்றிக் கொண்டே இருக்க, நான் அவற்றை அனுபவிப்பவனாக சில நேரம் துக்கத்தோடும், சில நேரம் மகிழ்ச்சியோடும் சில நேரம் பயத்தோடும் என மாறிக்கொண்டே இருக்கிறேன். இதில் எனக்கு தெளிவு நிலை ஏற்பட்டது போலத் தெரியவில்லை. குழப்பத்தில் நீடிப்பது போல் தான் படுகிறது. இதிலிருந்து நாங்கள் தெளிவு பெற உதவுமாறு கேட்டுக்கொள்கிறேன் நன்றி.

பதில் : சும்மா இருப்பது நமது செயலன்று. அது நம் முயற்சியால் வருவதுமன்று. மனதில் தோன்றும் எண்ணங்களையும் உணர்வுகளையும் எதிர்த்து எதுவும் செய்யமுடியாது என்பதையும் அவை நம் கட்டுப்பாட்டில் இல்லை என்பதையும் மிகத் தெளிவாகப் புரிந்து கொள்வது மட்டுமே நமது வேலை.

அவற்றின் ஆயுள் அரை நொடியாக மட்டும் இருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. அதுவாக எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டும். நம்மை அறியாமல் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் இருக்கட்டும். விழிப்பு நிலையில் இருக்க வேண்டும் என்பதே போராட்டம்தான். நமக்குத் தெரிந்து நாமாக எதிர்த்துப் போராடாமல் இருந்தால் போதும். மேலும் இதைப் புரிந்து கொள்வதால் எந்த எண்ணமும் உணர்வுகளும் வரவே வராத நிலை ஏற்பட்டுவிடும் என்று பொருள் கொள்ள வேண்டாம். நமது இயல்புக்குத் தகுந்த அனைத்து உணர்வுகளும் எண்ணங்களும் வந்து செல்ல அனுமதிக்கும் நிலை, தானாக ஏற்பட்டுவிடும்.

உண்மையில் இங்கு எண்ணங்களையும் உணர்வுகளையும் அனுபவிக்கும் அனுபவிப்பவன் கூட கிடையாது. அப்படி ஒன்று இருந்தால் அதுவும் அனுபவமே. புரிந்துகொண்ட நிலையில் எண்ணங்கள் எண்ணங்களோடு முரண்படுவதில்லை; உணர்வுகள் உணர்வுகளோடு முரண்படுவதில்லை. இதுவே சுய முரண்பாடற்ற நிலை. இதுவே பிரவாக நிலை; விடுதலையுற்ற நிலை.

அன்புடன்,
**K.S. ஜீவமணி,**
சேலம்.
செல் : 97891-65555

---

## பகவத் ஐயாவுடன் கோவையில் ஞானமுகாம்

வருகின்ற ஆகஸ்டு மாதம் 15, 16, 17 ஆகிய தேதிகளில் கோவையில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் ஞான முகாம் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இது தென் கைலாஷ் என்று அழைக்கப்படும் வெள்ளிங்கிரி செல்லும் வழியில் அமைந்துள்ள பல பழமையும் சிறப்புகளும் வாய்ந்த ஸ்ரீ இராமகிருஷ்ண விவேகானந்த ஆஸ்ரமத்தில் நடைபெற உள்ளது.

நாள் : 15-8-2014 வெள்ளிக்கிழமை மாலை 5-00 மணிமுதல்
17-8-2014 ஞாயிற்றுக்கிழமை மதியம் 2-00 மணிவரை

இடம் : ஸ்ரீ இராமகிருஷ்ணா விவேகானந்தா ஆஸ்ரமம்,
சித்திரை சாவடி, உலவம்பட்டி அஞ்சல், ஆலந்துறை வழி, கோவை.

காந்திபுரம் இரயில் நிலையம் ⟶ ஆலந்துறை - பஸ் நெ. 14, 14-A, 59 - பஸ் நிறுத்தம் : சித்திரைசாவடி

உணவுக்காக ஆகும் செலவுகளை பங்குபெறுபவர்கள் பகிர்ந்துகொள்ளலாம்.

மேலும் விபரங்களுக்கு : 97891 65555, 99942 05880, 96268 64449, 80986 07701

அனைவரும் வருக! தெளிவு பெறுக!

---

## பகவத் ஐயாவை நேரில் சந்திக்க விரும்புபவர்களுக்கு

10-05-2014 முதல் 22-05-2014 வரை ஸ்ரீ பகவத் மிஷன், அம்பத்தூர், சென்னை
26-05-2014 முதல் 30-06-2014 வரை ஸ்ரீ பகவத் மிஷன், அம்பத்தூர், சென்னை
02-07-2014 முதல் 17-07-2014 வரை திருச்செந்தூர்.

தொடர்புக்கு : 9944215677

## ஜென்கதை

## “புலம்புவதால் பயனில்லை”

அவர் ஒரு ஜென் துறவி. தினந்தோறும் அவரைச் சந்திப்பதற்குப் பொதுமக்கள் பலர் வருவார்கள். தங்களுடைய குறையைச் சொல்லிப் புலம்புவார்கள். நீங்கள்தான் எங்கள் பிரச்சினையைத் தீர்த்து வைக்கணும் என்று கெஞ்சுவார்கள்.

அப்போதெல்லாம் அந்தத் துறவி மெல்லப் புன்னகை மட்டும் செய்வார். "நான் என்ன மந்திரவாதியா?" என்கிற கேள்வி அதற்குள்ளிருக்கும்.

ஒரு நாள் அரசு அதிகாரி ஒருவர் அந்தத் துறவியைச் சந்திக்க வந்தார். தன்னுடைய அலுவலகத்தில் இருக்கும் பிரச்சினைகள், உள் அரசியல், ஆட்சியாளர்கள், உயர் அதிகாரிகளின் அலட்டல்கள், மக்களின் கோபம் என்று பல விஷயங்களைச் சொல்லிப் புலம்பினார். "இதுக்கெல்லாம் நடுவுல என்னால் உருப்படியா எந்த வேலையையும் செய்யமுடியவில்லை" என்றார்.

ஜென் துறவி வழக்கம் போல் சிரித்தார். "என்கிட்ட ஒரு கழுதை இருக்கு" என்றார்.

“என்னது? கழுதையா?…”

‘"ஆமாம், தினமும் நான் அந்தக் கழுதையோட முதுகுல நிறைய பாரத்தைச் சுமத்துவேன், சந்தைக்கு விரட்டுவேன்"!

"சாமி, அதுக்கும் என்னோட பிரச்சனைக்கும் என்ன சம்பந்தம்?"

"கொஞ்சம் பொறுங்க" என்றார் துறவி.

"நம்ம ஆசிரமத்துக்கு ரெண்டு பக்கமும் மண் பாதைகள் தான். எப்பவாச்சம் மழை பெஞ்சதுன்னா அந்தச் சாலையெல்லாம் சேறும் சகதியுமா ஆகிடும்!…

“இதனால், முதுகுல நிறைய பாரத்தைச் சுமந்துகிட்டு நடக்கற என்னோட கழுதை அந்தச் சகதியைத் தாண்டிப் போறதுக்கு ரொம்பச் சிரமப்படும். இல்லையா?”

“ஆமா சாமி. கொஞ்சம் கஷ்டம் தான்…”

“என்னோட கழுதை ரொம்பப் புலம்பிச்சு. சகதிக்கு நடுவில நின்றுகிட்டு என்னால நடக்கவே முடியலை. காலெல்லாம் மண்ணாயிடுச்சு. நான் ரொம்ப அழுக்கா இருக்கிறேன். கண்ணு இருட்டுது, முதுகு வலிக்குது என்று கத்துச்சு!…

“ஆனா, இப்படிக் கத்தறதால சேறும் சகதியும் மறைஞ்சுடப் போகுதா? அழுதாலும் புரண்டாலும் அதுதானே ரோட்டைக் கடந்து அந்தப் பக்கம் போகனும்?…

“அப்படி புலம்பிகிட்டு நிக்கறதால, அதோட முதுகுல இருக்கிற பாரத்தோட அழுத்தம் இன்னும் அதிகமாகுமுன்னு அதுக்குப் புரிஞ்சுடுச்சு. சகதியை வேகமாத் தாண்டி வெளியே வந்து பாரத்தை இறக்கி வெச்சுட்டு நிம்மதியா ரெஸ்ட் எடுக்குது!”

"உண்மை தான் சாமி!… "

"அதைப் புரிஞ்சிகிட்டப்புறம் தான் கழுதை புலம்புறதில்லை".

நம்ம மனசும் இந்தக் கழுதை மாதிரிதான்

நம்முடைய வேலையை செய்யும்போது மற்றவர்களால் நமக்கு ஏற்படும் கஷ்டங்களைச் சொல்லி நாம் புலம்புவதாலோ, மற்றவர்கள் நம்மிடம் நாம் விரும்பியபடி நடந்து கொள்ளவில்லையே என நாம் வருந்துவதினாலோ நம்முடைய மன அழுத்தம், தாங்க முடியாத மன வேதனை அதிகரிக்குமே தவிர ஒரு போதும் குறையாது.

அதனால் நம் வேலையை எப்படி எல்லாம் சிறப்பாக செய்து முடிக்கலாம் என்ற நோக்கத்துடன் நாம கவனமா இருந்து செயல்பட்டோம் என்றால், கண்ட சேறும் சகதியும் நமது பயணத்தைத் தடுக்காது சிரமப்படுத்தாது!





**Book packet** containing printed books

**Peritical**

*If undelivered please return to:*




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555

“மன உணர்வுகள் சம்பந்தமாக நாம் செய்வதற்கு எதுவம் இல்லை என்பதைப் புரிந்துகொள்வதே ஞானம்”

- ஸ்ரீ பகவத்

